# இந்தியாவா திராவிடமா தமிழகமா?






A. பாலசுப்ரமணியம்




விலை 12 காசுகள்

கம்யூனிஸ்ட் கட்சி வெளியீடு

# முன்னுரை

இந்திய ஒற்றுமையை உறுதிப்படுத்தும் பிரச்சினைகள் நாடெங்கும் விவாதிக்கப்பட்டு வருகின்றன. இந்தியா ஒரே நாடல்ல, அது என்றும் ஒன்றுபட்டிருந்ததில்லை, இனியும் அது ஒன்ருக இருக்கமுடியாது என்று சிலர் கூறி வருகின்றனர். திராவிடர் கழகமும் திராவிட முன்னேற்றக் கழகமும் அதில் முன்னணியில் நிற்கின்றன. திராவிட முன்னேற்றக் கழகம் திராவிட நாடு தான் எதார்த்தமென்றும், இந்திய தேசியம் வெறும் கற்பனை யென்றும் கூறி வருகின்றது. அண்மையில், திரு. சம்பத்தும் அவரது தோழர்களும் திராவிட நாடு வெறும் மாயை என்று சுட்டிக்காட்டி தி.மு.க.விலிருந்து வெளியேறி மொழியடிப்படை அமைப்பே எதார்த்தமென்று பேசி வருகின்றனர். திராவிட மாயையிலிருந்து இப்பொழுதேனும் அவர்கள் விடுபட்டது வரவேற்கத்தக்கதே. எனினும், பழைய தி.மு.க. கருத்துக்களிலிருந்து அவர்கள் இன்னும் பரிபூரணமாக விடுபட்டுவிடவில்லை. இந்தியா ஒரே நாடல்ல வென்றும், இந்திய தேசியம் என்பது கிடையாதென்றும் இவர்களும் பேசி வருகின்றனர்.

மறுபுறத்தில் பண்டித நேரு போன்ற தலைவர்கள்கூட மொழி வழி அமைப்பு சீர்குலைவானதென்று கூறி எதிர்த்து வருவதைக் காணுகிறோம். இது இந்திய ஒற்றுமைக்கு ஊறுபயக்கும் என்று அவர் கூறுகிருர். மொழி அடிப்படையில் ராஜ்யங்கள் அமைவதை அவர் எதிர்த்தார். ஆனாலும், மக்களின் வீரதீரப் போராட்டத்தின் காரணமாக, தியாகங்களின் காரணமாக ஆந்திரா, மகாராஷ்டிரா, முதலான மொழிவழி அமைப்புக்கள் ஏற்பட்டன.

மொழி ஆர்வம், தேசிய ஒற்றுமை ஆகிய பிரச்சினைகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டதல்ல. இரண்டும் ஒன்றுக்கொன்று உறுதுணையாக நிற்பதாகும். இதுவே கம்யூனிஸ்டுகளின் கருத்து. ஆகவேதான், மொழிவழி ராஜ்ய அமைப்பிற்கு அரசாங்கத்திடமிருந்து பெரும் எதிர்ப்பிருந்தபோதிலும், இதற்கான போராட்டங்களில் கம்யூனிஸ்டுகள் முன்னணியில் நின்றனர்.

திராவிட நாடு, மறைந்துபோன வர்ண, இன அடிப்படையைக் கொண்டதாகும். இது விஞ்ஞானத்திற்குப் புறம்பான

கற்பனைக் கோஷமாகும். இந்த உணர்வு தி. மு. க. அணிகள் மத்தியிலேயே ஏற்பட்டு வருவதைக் காணுகிறோம். இது மேலும் அதிகரிப்பது உறுதி. இல்லாத ஒரு வர்ண இன அடிப்படையில் எவ்வாறு ஒரு கூட்டாட்சி ஏற்பட முடியும்? திராவிடம் பேசும் தி. மு க. தோழர்கள் நடைமுறையில் தமிழகத்தைப் பற்றியே பேசியும், எழுதியும், வருவதைக் காணலாம்.

ஆளும் கட்சியின் நடவடிக்கைகளும், அதன் மக்கள் விரோதக் கொள்கைகளும் மக்களிடத்தில் ஏற்படுத்தும் அதிருப்தியை இக் கட்சிகள் பயன்படுத்திக் கொள்கின்றன. தங்களின் பிரிவினை வாதக் கொள்கைக்கு இதன் மூலம் ஆதரவு தேடுகின்றனர். இந்தியாவின் ஏற்றத்தாழ்வான வளர்ச்சியைச் சுட்டிக்காட்டி இந்தியா ஒரே நாடல்ல என்று நவிலுகின்றனர். ஏற்றத்தாழ்வான வளர்ச்சி முதலாளித்துவத்தின் சிருஷ்டியென்பதை அவர்கள் பார்க்க மறுக்கின்றனர். இந்தியா ஒரே நாடல்ல என்பதனால் ஏற்பட்ட ஏற்றத் தாழ்வல்ல இது, நாடு முதலாளித்துவப் பாதையில் செல்லுவதால் ஏற்படும் தீங்கேயாகும்.

எனவே சகல மொழிகளும் கலாச்சாரங்களும் செழித்து மலரவும், சகல இனங்களுக்கும் சம அந்தஸ்து வழங்கப்படவும்' மாநில அரசாங்கங்களுக்கு அதிக அதிகாரம் அளிக்கப்படவும், நாட்டின் உண்மையான ஜனநாயக ஒற்றுமை நிலைநிறுத்தப்படவும் எல்லா மொழி பேசும் மக்களும் ஒன்றுபட்டு, ஆளும் கட்சியின் சீர்குலைவுக் கொள்கைகளை எதிர்த்துப் போராடுவது அவசியம். இதற்குப் பரிகாரம் திராவிட நாட்டுப்பிரிவினையுமல்ல, தமிழ்நாட்டுப் பிரிவினையுமல்ல. இந்தியாவென்ற ஒரு நாடே இல்லை. இந்திய தேசியமேயில்லையென்று கூறுவது சரியாகாது.

தோழர் பாலசுப்ரமணியத்தின் இச்சிறு பிரசுரம் இந்த அம்சங்கள் சிலவற்றை நன்கு விளக்குகின்றன. அவர் இந்த முயற்சியை மேற்கொண்டது பாராட்டத்தக்கது.

சென்னை.
3-8-61

வி. பி. சிந்தன்

# இந்தியாவா? திராவிடமா? தமிழகமா?

••••••••••••••

தமிழ்நாட்டின் அரசியலில் தி.மு.க. விலிருந்து சில முக்யஸ்தர்கள் பிரிந்து, தனிக்கட்சி அமைத்திருப்பது ஒரு முக்கிய சம்பவமாகும். சமீப சில மாதங்களாகவே, தி.மு.க வுக்குள் சில கருத்து வேறுபாடுகள் தோன்றி கட்சிக்குள் நெருக்கடி முற்றி வேலூரில் வெடித்து, சில இடங்களில் சில வன்முறைச் செயல்கள் நடந்து பின் திரு. ஈ. வி. கே. சம்பத் அவர்கள் உண்ணு நோன்பு மேற்கொண்டு, அதன் பின் ஒருவகையான சமரசம் ஏற்பட்டு திருவொற்றியூரில் கூடி அதைத் திருவெற்றியூராக்கி 'ஒற்றுமை' நிலைநாட்டப் பட்டது. இவை பத்திரிகை மூலம் எல்லோரும் தெரிந்து கொண்ட தகவல்கள். அரசியலில் அக்கறையுள்ளவர்கள் இச்சம்பவப் போக்குகளைக் கூர்ந்து கவனித்து வந்ததில் வியப்பில்லை. தமிழ்நாட்டின் அரசியலில் ஒரு முக்கியமான இடம் பெற்றுள்ள ஒரு கட்சிக்குள் ஏற்பட்டு வளர்ந்து வந்த இப்போக்குகளை பலர் பல முனைகளிலிருந்து பார்த்தார்கள். அக்கட்சியின் எதிரிகள் மகிழ்ச்சி அடைந்தனர். நண்பர்கள் கவலைப்பட்டனர். ஆனுல் அக்கட்சிக்குள் நடக்கும் சர்ச்சை எத்தன்மை வாய்ந்தது, எந்தக் கருத்துக்கள் மீது வித்தியாசங்கள் எழுந்துள்ளன. கொள்கைச் சண்டையா அல்லது நடைமுறைகள்பற்றிய மாறுபாடா என்பவை தெளிவாகவில்லை. வெளித்தோற்றத்தில் " தலைவர்களுக்குள் தகராறு " என்று தோன்றியது.

கம்யூனிஸ்டுக் கட்சியைப் பொறுத்தமட்டில், தெளிவற்ற அங்கிலையில் தலையிட்டு எதுவும் சொல்ல விரும்பவில்லை. தமிழ் மக்களின் முன்னேற்றத்திற்கான ஜனநாயக இயக்கத்தை வளர்ப்பதில் பல விஷயங்களில் நேச

உறவுகொண்டு, ஒன்றுபட்டு செயல்படவேண்டும் என்ற கண்ணோட்டத்துடன், கம்யூனிஸ்டுக் கட்சி, தி.மு.க. வைப் பார்த்தது, பார்க்கிறது. அதேசமயம் தி. மு. க. வின் அடிப்படையான கொள்கையான நாட்டுப் பிரிவினை — திராவிடப் பிரிவினை — என்பதை கம்யூனிஸ்ட் கட்சி நிராகரித்து வந்துள்ளது. இதில் என்றுமே ஒளிவு மறைவு இல்லை. ஏன்? எவ்வளவோ கடுமையாக தி. மு. க. தலைவர்களால் தாக்கப்பட்ட போதிலும் இப்பிரிவினை வாதம் தவறானது, என்பதை எடுத்துச் சொல்லி வந்திருக்கிறோம் — ஆதிமுதலே, நீண்ட நெடுங்காலமாகவே. இருந்தபோதிலும் நட்புறவை வளர்த்துத் தமிழ் மக்களுக்குச் சேவை செய்வதில் நமது இரு கட்சிகளையும் இணைத்துச் செயல்படச் செய்ய இடைவிடாது முயற்சி செய்து வந்திருக்கிறது, செய்கிறது, இனியும் செய்யும். இதனால்தான் சர்ச்சையின் தன்மை புலப்படாதிருந்த வேளையில், நாம் அந்த சர்ச்சை குறித்து எழுதுவதோ பேசுவதோ, தவறாக அர்த்தப்படுத்திக் கொள்ளப்படலாம் என்று கருதினோம்.

இன்று நிலைமை மாறிவிட்டது. புதிய அம்சங்கள் வெளிப்படையாகத் தோன்றிவிட்டன. புதிய கட்சியே அமைக்கப்பட்டுவிட்டது. இந்நிலை உருவானதற்கு அடிப்படையாக இருந்துள்ள காரணங்கள் பற்றி, இன்று நாம் குறிப்பிடுவதைப் பற்றி எவரும் வருத்தப்பட இடமில்லை. புதிய கட்சியில் புகுந்துள்ளவர்களும் பழைய கட்சியிலேயே நீடிப்பவர்களும், ஆழ்ந்து ஆலோசிக்க வேண்டிய நேரம் இது. பரஸ்பரம் வெறுப்பை வளர்த்துக்கொள்வது பயன் தராது. கருத்துத் தெளிவுபெற உதவாது. தனிக் கட்சிகளாகவே இயங்கினாலும், நாளையும் பின்னரும், மக்களின் நலன் கருதி பல விஷயங்களில் ஒன்றுபட்டு வேலைசெய்ய வேண்டியது அவசியப்படும். அநியாய வரிச் சுமைகளை எதிர்த்தோ, விலைவாசி உயர்வுகளைக் கண்டித்தோ, உழவனுக்குச் சாதகமான நிலச்சீர்திருத்தங்களுக்கோ.....பிரஜா உரிமைகளுக்கோ......ஒன்றுபட்டுச் செயல்பட வேண்டியவர்களாகத்தான் இருப்போம் என்பதை மனதில் உறுதியாக இருத்திக்கொள்வதும் அவசியம். பிரிந்து சென்றுள்ளவர்களை தூஷிப்பதன் மூலம், அவர்களை "மீட்க" இயலாது.

பழைய கட்சிக்குள்ளே நீடிப்பவர்களோ புதிய கட்சிக்காரர்கள் தூஷிப்பதன் மூலம் சிந்தனைச் செறிவை சிருஷ்டிக்க இயலாது. ஆகவே அதை ஒழித்து, தமிழ் மக்களின் முன்னேற்றத்தில் ஆழ்ந்த அக்கறையுள்ளவர்கள் என்பதை மட்டும் மனதில்கொண்டு, சரியான வழி காண, கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்ளும் முயற்சியில் ஈடுபடுவதே பொருத்தமானது என்று எடுத்துச்சொல்ல விரும்புகிறோம்.

## அடிப்படைக் கொள்கை மாறுபாடு

இன்று ஒரு விஷயம் மிகவும் தெளிவாகிவிட்டது. ஏற்பட்டுள்ள சர்ச்சை ஏதோ இரண்டாந்தரமான ஓரிரு சில்லரைக் கருத்துக்கள் பற்றியதல்ல. நடைமுறை பற்றிய வேறுபாடுகளல்ல, தலைமையில் உள்ள நண்பர்களுக்குள் "பிடியாமை அல்ல (mutual incompatibility), தலைமைக்கான போட்டியுமல்ல; சினிமாக்காரர்களுக்கும்—அல்லாதவர்களுக்குமான சச்சரவுமல்ல. இம்மாதிரியான அம்சங்கள் அறவே இல்லையென்று நாம் சொல்வதாகக் கொள்ளவேண்டியதில்லை. ஆனால் அவை அல்ல பிரதானமானவை. பிரதானமானது, அனைவரும் சிந்திக்கவேண்டியது, அடிப்படையான கொள்கை மாறுபாடே. " திராவிட நாட்டுப் பிரிவினை " என்ற கருத்தே—கொள்கையே—தவறானது—கற்பனையில் எழுந்தது—கைகூடாதது, என்று திரு. சம்பத் அவர்கள் தெரிவித்துள்ளார்கள். ஆகவேகொள்கை வேறுபாடுதான் மூலகாரணம் என்பது தெளிவு.

18-6-61-ந் தேதியிட்ட 'நம்நாடு' பத்திரிகையில் திரு. சி. என். ஏ. அவர்கள் விலகிச் செல்வோருக்கு விடுத்த அன்பழைப்பில் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்கள்.

"கொள்கையிலே மாற்றம் வேண்டும் என்று கூறப்படவில்லை. நடைமுறைகளிலே மாற்றம் வேண்டும் என்பதுதான் வலியுறுத்தப்பட்டது. ஒருகிழமைக்கு முன்புவரையில்கூட, கழகத்தோழர்களிடையே கருத்து வேற்றுமைகள், கொள்கை அடிப்படையில் அல்ல என்று திட்டவட்டமாக எடுத்துக் கூறப்பட்டது.

இனி பிரிந்து போகவேண்டிய காரணம் என்ன இருக்கமுடியும்? கசப்புணர்ச்சிகளின் விளைவுகளாக பல சம்பவங்கள் இரண்டாண்டுகளாக விட்டுவிட்டு நடைபெற்றுக் கடைசியில் திருவொற்றியூர் காவலர் கூட்டத்திலே, புத்துயிர் பெற்றோம்."

ஆக திரு. சி. என். ஏ. வேண்டுகோள் குறிப்பிடுவது என்ன?

1. கொள்கைச் சண்டையில்லை.

2. நடைமுறைகளிலே மாற்றம் வேண்டும் என்பது தான் வலியுறுத்தப்பட்டது.

3. கசப்புணர்ச்சிகளின் விளைவே.

கட்சியின் ஒற்றுமையைப் பாதுகாக்கவும், விலகிச் செல்வோரை மீண்டும் திரும்பிவரச் செய்யவேண்டும் என்ற நோக்கத்துடனும், அந்த குறிப்பிட்ட சூழ்நிலையில் வித்தியாசங்களைப் பெரிதாக்கிக் காட்டுதல் உதவாது என்ற உணர்வுடனும், கட்சியின் பொதுச்செயலாளர் என்ற பொறுப்பில் உள்ள கட்சியின் ஸ்தாபகர்களில் மூத்தவரான திரு. சி என். ஏ. அவர்கள் இவ்வாறு எழுதியது தவறென்று கூற முற்படவில்லை நாம். ஆனால் இன்று நிலைமை முற்றி வெடித்து வேறு கட்சி உதயமாகி, அதன் கொள்கையும் பிரகடனமாகிவிட்டது. அதன் ஸ்தாபகர்களின் முதல்வரான திரு. ஈ. வி. கே. சம்பத் அவர்கள் புதிய கட்சியின் கொள்கையை விளக்கிப் பத்திரிகை நிருபர்களிடம் பேசியபொழுது கீழ்க்கண்டவாறு சொன்னதாக "தனிஅரசு" (23-4-61 இதழ்) பிரசுரித்துள்ளது. "தற்போதுள்ள சூழ்நிலையில், சுதந்திர திராவிட நாடு" கொள்கை, நடைமுறைக்கு ஒவ்வாதது மட்டுமல்ல, பத்தாம் பசலியுமாகும், என்றும் பத்து ஆண்டு காலத்துக்கு மேலாக ஏற்பட்ட அனுபவத்தில் தி. மு. க. வின் அந்த லட்சியம் அடைய முடியாத ஒன்று என்பது நிரூபணமாகிவிட்டது என்றும், நேர்மை நோக்குடைய எவரும் அதைப் பின்பற்ற முடியாது" என்றும் திரு. சம்பத் குறிப்பிட்டார். மேலும் தனது புதுக் கட்சியின் சார்பில் திரு. சம்பத் அவர்கள் பேசுவதிலும் எழுதுவதிலும் இந்த அடிப்படையான வேறுபாட்டை விளக்கிவருகிறார்.

ஆக, திராவிட நாடு என்ற அடிப்படை இலட்சியமே கற்பனையில் உதித்தது. நடைமுறையில் அடைய முடியாதது. மக்களின் உணர்வுக்குப் பொருத்தமில்லாதது என்ற கொள்கை மாறுபாடு வெளிவந்துள்ளது. நடைமுறைகளில் மாற்றம் வேண்டும் என்பதல்ல, கசப்புணர்ச்சிகள் அல்ல முக்கியமானவை. இந்த இலட்சியமே கைகூடாதது என்று இந்த இயக்கத்தின் அடிப்படையே கேள்வி கேட்கப்படுகிறது. இந்தக் கேள்விக்கு சரியான விடை காண்பது அவசியம். தி.மு.க. வினருக்கு மட்டுமல்ல, தமிழ் மக்களனைவருக்கும், இந்திய மக்களனைவருக்கும் அவசியம்.

தமது கட்சியை விட்டுப்பிரிந்து பிளவுபடுத்தித் தனிக் கட்சி வைத்துள்ள திரு. சம்பத் முதலியோர்களின் கேள்வி என்று புறக்கணிப்பது சரியாகாது, விவேகமாகாது. அவர்கள் மீதுள்ள வெறுப்பினால், ஆத்திரத்தினால் கேள்வியை அலட்சியப் படுத்தலாகாது. இந்த நேரத்தில் சம்பத் மூலம் வெளிவந்தபோதிலும், இந்தக் கேள்வி நீண்டகாலமாக தி. மு. க.வினர் முன்பு உள்ள கேள்விதான். புதிய கேள்வியல்ல! தமிழகத்தில் உள்ள இதர எல்லாக் கட்சிகளும் ஏற்கனவே கேட்டுவந்த கேள்விதான். கம்யூனிஸ்ட் கட்சி ஆதிமுதல் முன்வைத்து வந்துள்ள கேள்விதான். இன்றும் தி.மு.க. வுக்குள் பல மட்டங்களில் உள்ளூர இருந்துவரும் கேள்விதான். ஏன்! திரு. சம்பத் அவர்கள் கூறியுள்ளது உண்மையாக இருப்பின்—வேறாக இருக்க நியாயமில்லை—தி. மு. க. தலைவர்கள் அனைவரின் உள்ளத்திலேயே இருக்கும் கேள்விதான்.

### திரு. சம்பத் தரும் தகவல்

20-4-61-ல், சென்னை ஒற்றைவாடைத் தியேட்டரில், அவரது 165 நிமிடப் பேச்சில் கீழே உள்ளவாறு பேசியதாக 22-4-91 தேதி 'தனி அரசு' பத்திரிகையில் உள்ளது.

"1958-ல் திரு. வி. பி. ராமன் வீட்டில் ஒரு கருத்தரங்கு நடந்தது. திராவிடநாடு கர்த்தாவான பெரியாரே திராவிட நாடாவது, வெங்காய நாடாவது என்று பேசிவிட்டார். இதை காங்கிரஸ் கட்சியினர் பெரிதாகப் பேசினார்கள். ரஷ்யாவிலிருந்து திரும்பி வந்த நான் இது

குறித்து நண்பர்களுடன் திரு. ராமன் வீட்டில் பேசினேன். அப்போது திரு. கருணாநிதி இந்த சந்தேகம் ஒரு ஆண்டு காலமாக தனக்கு இருந்து வருகிறது என்று கூறினார். "ஏன் வேண்டும் இன்பத் திராவிடம்" புத்தகம் எழுதிய திரு. மாறனே "அத்தான்! எத்தனை நாட்கள் ஊரை ஏமாற்றிவருவது" என்று கேட்பதாக திரு. கருணாநிதி கூறினார். குழப்பமாயிருக்கிறது என்றார் திரு. மதியழகன். சொல்லி வருவதை மாற்றக்கூடாது என்றார்கள் திரு. ஆசைத்தம்பியும், திரு. ராஜாராமும்; சிந்திக்கவேண்டும் என்று திரு. இரா. நெடுஞ்செழியன் சொன்னார்...... நான் இது முக்கிய விஷயம் என்றேன். மாநில மாநாட்டில் இது குறித்துப் பேசலாம். தானே தீர்மானம் கொண்டுவருவதாக திரு. அண்ணாதுரை சொன்னார்."

அடுத்த நாள் 'தனி அரசு' பத்திரிகையில் மேலே கண்ட பேச்சின் தொடர்ச்சி பிரசுரிக்கப்பட்டுள்ளது. அதில் மீண்டும் திரு. சம்பத் கீழே உள்ளவாறு பேசியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

"நான் அண்ணா அவர்களைக் காஞ்சிபுரத்திலிருந்து சென்னைக்கு வருமாறு தொலைபேசி மூலம் கேட்டேன். "நீங்கள் வருகிறீர்களா? நாங்கள் வரட்டுமா? என்று கேட்டேன். நானே வருகிறேன் என்றார். நாங்கள் காத்திருந்தோம், அவர் வந்தார். நாங்கள் ஒவ்வொருவரும் கொண்ட கருத்தினை தொகுத்து எழுதிக் கொடுத்தேன்.

பார்த்து விட்டு தமிழ்நாடு என்பது எனக்கும் சம்மதமே. ஆனால் இப்போது பேசவேண்டாம். மாநில மாநாட்டில் நானே தீர்மானமாகக் கொண்டுவந்து முன் மொழிகிறேன். நீ வழிமொழிந்து பேசிவிடு என்று கூறினார்!... நான், நாம் ஒரு பெரிய கொள்கைபற்றிய விவகாரத்தில் பெரும் வெற்றி பெற்றுவிட்டோம். தலைவரையே திருப்தி படுத்திவிட்டோம் என்ற மகிழ்ச்சியில் திளைத்திருந்தேன்.'

இது திரு. சம்பத் தரும் தகவல். திராவிடநாடு அடைய முடியாதது என்றும், தமிழகத்தின் எல்லைக்குட்படுத்தப்பட்ட இயக்கமாகவே இருக்கமுடியும் என்றும் முக்கியத்

தலைவர்களுக்குள் உணர்வு ஏற்பட்டுள்ளது. அந்த உணர்வு அவர்களுக்குள் ஒரு விவாதத்தைத் தூண்டியது. விவாதத்தில் பங்கெடுத்த அனைவருக்கும் திராவிட நாடு என்ற இலட்சியத்தில் சந்தேகம் இருந்துள்ளது. இரா. நெடுஞ்செழியன் "சிந்திக்கவேண்டும்" என்று சொல்லி யிருக்கிறார். ஆசைத்தம்பியும், ராஜாராமும் "சொல்லி வருவதை மாற்றக் கூடாது" என்று கூறியுள்ளார்கள். விஷயத்தின் தன்மைக்குள்ளே புகுந்து, கருத்துத் தெரி விக்காமல் 'சொல்லி வருவதை மாற்றக்கூடாது' என்று சொல்லியுள்ளனர். சொல்லிவருவதை மாற்றுவதில் உள்ள நடைமுறைச் சங்கடத்தை மட்டும் மனதில் வைத்துப் பேசி யுள்ளதாகத் தோன்றுகிறது. உள்ளூர திராவிடநாடு என் பது சரியல்ல என்ற எண்ணம் அவர்களுக்கும் அச்சமயம் இருந்திருக்கலாம். ஆனால் மாற்றிக்கொள்வது என்ற கசப் பான நடைமுறைக்கு அவர்கள் தயாராக இல்லை என்று கொள்ளலாம். மதியழகன் குழப்பமாக இருக்கிறது என்று கூறியுள்ளார் 'குழப்பம்' சிந்தனையின் ஆரம்பக்கட்டம்; சந் தேகம் ஏற்பட்டுவிட்டது. ஆனால் தெளிவான முடிவுக்குப் போகும் இணக்கமான சிந்தனை இன்னும் ஆரம்பமாக வில்லை. தெளிவற்ற நிலையில் இருந்திருக்கிறார். கருணாநிதி அவர்கள் ஒரு ஆண்டுக்காலமாகவே சந்தேகம் என்று கூறியுள்ளார்.

இந்தக் கருத்துப் பரிமாற்றத்தில் கலந்து கொள்ளாத திரு. கண்ணதாசன் அவர்கள் இரண்டாண்டுகளுக்கு முன்னரே இம்முடிவுக்கு வந்துவிட்டதாகப் பேசிவருகிறார். திரு. அண்ணாதுரை அவர்களோ, இதர முக்கிஸ்தர்களின் கருத்துத் தொகுப்பைப் (சம்பத் எழுதிவைத்திருந்த குறிப்பை) பார்த்துவிட்டு "தமிழ்நாடு என்பது எனக்கு சம் மதமே. ஆனால் இப்பொழுது பேசவேண்டாம்; மாநில மாநாட் டில் நானே தீர்மானமாகக் கொண்டுவந்து முன்மொழி கிறேன். நீ வழிமொழிந்து பேசிவிடு" என்று கூறியுள் ளார்.

அதாவது தி.மு.க.வின், மிக மிக முக்கியமான தலைவரும் ஸ்தாபகருமான திரு. அண்ணாத்துரை அவர் கள், அக்கட்சிக்குள் வேறு எவருக்கும் இல்லாத

அந்தஸ்துடன் கூடிய திரு. அண்ணாத்துரை அவர்கள், தீர்க்கமான இறுதி முடிவுக்கே வந்துள்ளார்கள். திரு. சம்பத் அவர்களின் கருத்தை ஏற்றிருக்கிறார்கள்; குழப்பத்தில் இருக்கவில்லை, சிந்திக்க வேண்டியது என்று விட்டு வைக்கவில்லை; சந்தேகமாக இருக்கிறது என்று சொல்லவில்லை; தெளிவான இறுதி முடிவுக்கே வந்துள்ளார்கள். ஆனால் இப்போது பேசவேண்டாம் என்று கூறியுள்ளார். இப்பெரிய கொள்கை மாற்றத்திற்கு அண்ணாவின் சம்மதம் கிடைத்தது பற்றி திரு. சம்பத்துக்கு மகிழ்ச்சி ஏற்பட்டதில் வியப்பிருக்க முடியாது.

ஆக இதிலிருந்து தெரிவதென்ன? திராவிடநாடு என்ற இலட்சியம்பற்றிய அடிப்படையான கேள்வி, தி. மு. க.வுக்குள்ளும் எழுந்துள்ள கேள்வி, "உச்சமட்டத்திலே" எழுந்த கேள்வி, ஐவர் குழுவுக்குள்ளே எழுந்த கேள்வி, திரு. சம்பத்தும் அண்ணாத்துரையும் தெளிவான விடையளித்த கேள்வி.

இவ்வாறு ஒரு கருத்தரங்கு நடந்தது என்பதை இன்று எவரும் மறுக்கவில்லை. இந்த நேரத்தில் இவ்வாறாக கட்சியிலிருந்து பிரிந்து சென்று தனிக்கட்சி அமைத்துள்ள திரு. சம்பத் மீது இயல்பான ஆத்திரம் இருந்தாலும் இந்தத் தகவல்களைப் பொறுத்தமட்டில் அவர் உண்மைக்கு மாறானவற்றைக் கூறுகிறார் என்று எவரும் சொல்லவில்லை. நடக்காததை நடந்ததாகக் கற்பனை செய்து கூறுவதாக எவரும் மறுக்கவில்லை.

மேலும் இவ்வாறாக ஒரு கருத்துப் பரிமாற்றம் ஏற்பட்டதில் வியப்பு ஒன்றும் இல்லை. நாடு முழுவதும் ஏற்பட்ட சர்ச்சை—நாட்டு மக்கள் மத்தியில் எழுந்த சர்ச்சை—அவர்கள் மத்தியில் வேலைசெய்யும் கட்சிக்குள் ஏற்படாதா? ஏற்படத்தான் செய்யும், ஏற்பட்டதே இயல்பு.

எவர் எந்தக் கட்சியில் இருந்தாலும் எதார்த்தத்தைப் பாராமல் இருக்க எவராலும் முடியாது. சிலர் எதார்த்தத்தை உடனுக்குடன் பார்க்கிறார்கள். சிலர் சற்றுக்காலம் சென்றபின் பார்க்கிறார்கள். சிலருக்கு எதார்த்தத்தைப் பார்க்க அதிக காலம் பிடிக்கிறது. ஆனால் எதார்த்

தத்தை எப்படியும் எப்பொழுதாவது பார்த்துத்தான் ஆக வேண்டுமல்லவா? தி. மு. க. தலைவர்களும் எதார்த்த வாதிகள்தானே! (Realists) பிரத்யட்ச நிலைகளில் இருந்தும், பிரத்யட்ச உண்மைகளிலிருந்தும், மக்களின் பிரத்யட்ச உணர்வுகளிலிருந்தும் ஒதுங்கி நிற்பவர்களல்லவே! ஆக, அவர்கள் இதுபற்றி ஆலோசித்ததும் விவாதித்ததும், சில முடிவுகளுக்கு வந்ததும் வியப்பில்லை.

## தூத்துக்குடி தீர்மானம்

இவ்வளவும் இருந்தும் சில தினங்களுக்கு முன் தூத்துக்குடியில் கூடிய தி. மு. க.வின் செயற்குழுவும், பொதுக்குழுவும் தங்களது திராவிட நாடு இலட்சியத்தில் மீண்டும் நம்பிக்கையைத் தெரிவிக்கும் தீர்மானத்தை நிறைவேற்றியுள்ளன. ஒரு கருத்து-எவ்வளவு தவறாக இருந்தபோதிலும்—மனதில் வேரூன்றிவிட்டால் அதை மனதில் இருந்து அகற்றுவது எவ்வளவு சிரமமானது என்பதற்கு இத்தீர்மானம் எடுத்துக்காட்டு. நாம் அவர்களைக் குறைகூற முற்படவில்லை, அதுதான் சரியான கருத்து என்று நம்பினவர்கள் அந்த நம்பிக்கையைப் பல்லாயிரக் கணக்கான ஊழியர்களுக்கு ஊட்டினவர்கள், தங்களது பிரசாரத் திறமை முழுவதையும் திரட்டி இக்கருத்தை நாட்டில் பரப்பியவர்கள் ஒரு பகுதி மக்கள் மத்தியில் இந்தப் பிரமையை உண்டாக்கியவர்கள் எதார்த்தத்திற்குக் கிஞ்சித்தும் சம்பந்தமில்லாத முழுக்க முழுக்கக் கற்பனையிலே உதித்த ஒரு கருத்துக்கு இந்த அளவு ஆதரவு திரட்டினுர்கள் என்பது, அவர்களின் பிரச்சார வன்மைக்கும் திறமைக்கும் எடுத்துக்காட்டே. இவ்வாறுகத் தாமே சிருஷ்டித்து வளர்த்த ஒரு கருத்திலிருந்து மாறுவது என்பது — அந்தக் கருத்தைக் கைவிடுவது என்பது—மிகவும் கஷ்டமான வேதனையான காரியம் என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வார்கள். அந்தக் கருத்தைச் கைவிட எடுக்கப்படும் முயற்சிகளை எவ்வளவு தயக்கத்துடனும், அரை மனதுடனும் செய்யப்பட்ட முயற்சிகளானுலும் அனுதாபத்துடன் பார்ப்பதே பொறுப்பான அரசியல் வாதிகளின் கடமையாகும்.

திரு. சம்பத் அவர்கள் குறிப்பிடும் கருத்தரங்கில் ஒப்புக்கொண்டவர்கள், இன்று மீண்டும் தயங்குகின்றார்கள். குறிப்பாக திரு. சம்பத் தனிக்கட்சி அமைத்து 'சவால்' விடும் வேளையில் அவர்கள், வேறுமாதிரியான தீர்மானம் நிறைவேற்றியிருக்கக்கூடும் என்று எண்ணுவதற்கு நியாயமில்லை. தீர்மானம் எப்படி இருந்தபோதிலும் கம்யூனிஸ்டுக் கட்சியைப் பொறுத்தமட்டில் தி. மு. க.வினர் துரிதமாகவே சரியான முடிவுக்கு வரவேண்டும் என்று விரும்புகிறது. தமிழகத்தில் உள்ள முற்போக்காளர்கள், இடதுசாரி மனோபாவம் கொண்டவர்கள், ஜனநாயக வாதிகள்—எல்லாக் கட்சிகளுக்கும் பின்னால் உள்ள நல்லவர்கள் அனைவரும் விரும்புவதும் இதுவே. ஒற்றுமைக்குக் குறுக்கே நிற்கும் இந்தப் பிரிவினைக்கோஷம் கைவிடப் படுவதை எல்லாத் தமிழ்மக்களும் எதிர்பார்க்கின்றனர்.

## விவரமான ஆராய்ச்சி தேவையில்லை

சில முக்கியமான உண்மைகளை மட்டும் பார்த்தால் போதுமானது (1) வர்ண இனத்தின் (Race) அடிப்படையில் மட்டும் ஒரு நவீன தேசிய அரசு அமைவதில்லை. மனித சமுதாயம் மாறிக்கொண்டேயிருக்கிறது. பூர்வ குடிகளின் அமைப்பு மாறி, அடிமைச் சமூகங்கள் தோன்றி, பிரபுத்வ கால அமைப்புக்கள் வளர்ந்து அவைகளுக்குப் பின்னரே தேசிய அரசுகள் (National States) தே ன்றின என்பது அனைவரும் அறிந்துள்ள வரலாற்று உண்மை. பிரபுத்துவ கால அமைப்புகள் உள்ளிட்ட முற்கால எந்த அமைப்பும் தேசிய அரசுகளாக இருக்கவில்லை. அடிமைச் சமுதாய காலத்தில் கிரேக்க சாம்ராஜ்யம் இருந்தது; ஆனால் கிரீஸ் தேசிய அரசு இருக்கவில்லை. ரோம் சாம்ராஜ்யம் இருந்தது; ஆனால் இத்தாலிய தேசிய அரசு இருக்கவில்லை. பாரசீக சாம்ராஜ்யம் இருந்தது; ஆனால் பார்சிய (இரானிய) தேசிய அரசு இருக்கவில்லை. மௌரிய சாம்ராஜ்யமோ குப்த சாம்ராஜ்யமோ இருந்தன; ஆனால் இந்திய தேசிய அரசு இருந்ததில்லை, அதேபோல் பிரபுத்துவகால சாம்ராஜ்யங்களோ அல்லது அமைப்புகளோ இருந்தன; ஆனால் தேசிய அரசுகள் ஏற்படவில்லை (National States). மனித சமுதாயத்தின், மாற்றங்கள் நிறைந்த வளர்ச்சிப் போக்

கில் முதலாளித்துவம் தோன்றிய பின்னரே தேசிய அரசுகள் என்ற நவீன அமைப்புகள் தோன்றின. சிறந்த உதாரணம் இன்றைய இத்தாலி தேசம் அடிமைக்கால ரோம் சாம்ராஜ்யம் அழிந்தபின், பிரபுத்வகாலத்தில் நகர ராஜ்யங்கள் நிறைந்த பிரதேசமாக இருந்தது (ரோம், வெனிஸ் பீளா ரென்ஸ், நேபிள்ஸ் etc. City States) அடுத்த கட்டத்தில், முதலாளித்துவத்தின் வளர்ச்சியை ஒட்டியே இத்தாலிய தேசியமும் அதன் இணையற்ற தலைவனை கரிபால்டியும் தோன்றினர். இவ்வாறு வளரும் தேசியத்திற்கும், ஆதிகால வர்ண இன உணர்ச்சிகளுக்கும் சம்பந்தமில்லை.

2. இந்திய நிலப்பரப்பில் எத்தனையோ வகையான பூர்வகுடிகள் இருந்துள்ளனர். எத்தனையோ வர்ண இனங்கள் வந்து கலந்துள்ளன. எத்தனையோ சாம்ராஜ்யங்கள் (மௌரிய சாம்ராஜ்யம் முதல் மொகலாய சாம்ராஜ்யம் வரை) இருந்துள்ளன. இவைகளுக்கு உடபட்டும் உட்படாமலும் எத்தனையோ தனித்தனிச் சிற்றரசுகள் இருந்துள்ளன. ஒரு மொழி பேசிவந்த மக்கள் மத்தியிலேயே பல சிற்றரசுகள் இருந்துள்ளன. சேர, சோழ, பாண்டியர்கள் போல் மூலைக்கு ஒரு குடிமன்னன் என்று இருந்துள்ளார்கள்! ஆனால் தமிழ் தேசிய அரசு இருந்ததில்லை; வங்காள, மராத்திய, கேரள, கூர்ஜர, பாஞ்சால தேசிய அரசுகள் இருக்கவில்லை; இந்திய தேசிய அரசும் இருக்கவில்லை.

3. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பிடியில் இந்தியா சிக்கிய பின்னர், "சுயதேவைப் பூர்த்தியாக" இருந்த கிராமச் சமுதாயங்கள் உடைக்கப்பட்டன. நிலம் விற்பனைப் பொருளாயிற்று; இந்த கிராமக் கைத்தொழில்கள் அழிக்கப்பட்டன. பிரிட்டிஷ் முதலாளித்துவத்தின் சந்தையாக இந்தியா மாறியது. பிரிட்டிஷ் முதலாளித்துவப் பொருளாதாரத்துடன் இந்தியா இணைக்கப்பட்டது. இதன் போக்கில் இந்தியாவில் மெள்ளமெள்ள முதலாளித்துவம் வளர்ந்தது சுதேசி முதலாளித்துவம் வளர வளர தனது வளர்ச்சிக்குத் தடையாக இருந்த ஏகாதிபத்தியத்தை எதிர்த்தது - இந்திய தேசியம் உருவெடுத்தது.

4. இவ்வாறு இமயம் முதல் குமரிவரை எழுந்த, அந்நிய எதிர்ப்பு தேசியத்தின், அங்கங்களாக, அந்த தேசியத்தையே வலுப்படுத்தி வளர்துக்கொண்டு அதே சமயம் அந்த தேசியத்தின் தனித் தனிச் சிறப்பியல்புகளைக் கொண்ட உட்பிரிவுகளாக பல மொழிவழி தேசியங்களும் மலர்ந்தன. குறிப்பிட்ட பிரதேசத்தில் முதலாளித்துவ வளர்ச்சியைப் பொறுத்து இந்த தேசியம் வளர்ந்தது, உரு வெடுத்தது. இதை மார்க்சிய வாதிகள் பல்லாண்டு களுக்கு முன்னரே பார்த்தனர். "தோழர் ஸ்டாலின் இந்தியாவுக்குள் பல தேசிய இனங்கள் மண்டிக் கிடக்கின்றன. இவை துரிதமாக மலர்ச்சியடைந்து முன்வரும்" என்று சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்னரே எழுதினார்.

இவ்வாறு வளர்ந்தவை தான் தமிழ் தேசியம், கேரள தேசியம், ஆந்திர தேசியம், கன்னட தேசியம். அதே போல் மராத்திய, கூர்ஜர, பாஞ்சால, வங்க, அசாமிய, ஒரிய, ராஜஸ்தான், பீஹாரிமுதலியவையும் அந்நிய ஏகாதிபத்தியத்தை எதிர்த்து இந்திய மக்கள் நடத்திய புனித மான விடுதலைப் போரான இந்திய தேசியம் என்ற கொடியிலே மலர்ந்த புஷ்பங்கள் இவை. இந்த மொழிவழி உணர்ச்சிகளைக் கணக்கில் கொண்டே, அக்கால காங்கிரஸ் அமைப்பில் மகாத்மா காந்தி மொழிவழி அமைப்புக்களை ஏற்படுத்தினார். பிற்காலத்தில் மொழிவழி அமைப்புகளாக திருத்தி அமைப்போம் என்ற வாக்குறுதியை காங்கிரஸ் மேலிடம் உதாசீனப்படுத்தியபொழுது, மொழிவழி அமைப்புக்காக ஆந்திர மக்களும், கேரள மக்களும் மராத்தி மக்களும், குஜரத் மக்களும் எவ்வளவு உக்கிரமான போராட்டங்களை நடத்தினர் என்பது சமீப சரித்திரம்; இங்கு எடுத்து விரித்துரைக்க வேண்டியதில்லை.

5. ஆகவே இந்திய தேசியம் என்ற உண்மையை மறுப்பதும் எதார்த்தமாகாது; அதேபோல் மொழிவழி தேசியம் இன உணர்ச்சிகளை மறுப்பதும் எதார்த்தமாகாது. இவை இரண்டும் இந்திய சமுதாய வளர்ச்சியின் இரு பெரும் உண்மைகள், ஒன்றை ஒன்று தழுவி ஒன்றுக் கொன்று துணையாய் வளர்ந்த உண்மைகள், ஏகாதிபத்திய எதிர்ப்பிலே பிறந்தவை, ஒன்றுக்கொன்று துணைசெய்து

வளரவேண்டியவை. இந்த ஒற்றுமை நேற்று—ஏகாதிபத்தியத்தின் அரசியல் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடத் தேவைப்பட்டது. இன்று ஏகாதிபத்தியத்தின் நவீனச் சதிகளை முறியடிக்கவும், 43 கோடி மக்களின் ஜனநாயக வளர்ச்சிக்கும் தேவைப்படுகிறது. நாளை இந்த 43 கோடி மக்களின் சோஷலிஸ முன்னேற்றத்திற்கும் தேவைப்படும். இன்றைய ஆட்சியாளர்கள் இந்த உணர்வுடன் செயல்படவில்லை; மாறாக இந்த ஒருமைப்பாட்டைப் பலவீனப்படுத்தும் பல நடவடிக்கைகளை எடுக்கின்றனர். அதன் விவரங்களுக்கு நாம் இங்கு போகவில்லை; வேறு சந்தர்ப்பத்தில் அதுபற்றிப் பரிசீலிப்போம்.

தனித் திராவிடம் கோரும் தி. மு. க. தலைவர்கள் இந்த இரண்டு உண்மைகளையும் உதாசீனப்படுத்துகின்றனர். இவைகளுக்குள் உள்ள உறவையும் பார்க்கவில்லை. இவை இரண்டிற்குமே சம்பந்தமில்லாமல் வடக்கே உள்ள 'ஆரிய' நாட்டிலிருந்து தெற்கே உள்ள 'திராவிட நாடு' என்பது பிரிக்கப்படவேண்டும் என்ற கற்பனைக் கோஷத்தை முன்வைத்தனர். ''ஆரிய'' ''திராவிட'' என்ற சொற்களே வர்ண இனங்களை குறிப்பிடும் சொற்கள். அந்த வர்ண இனக்கருத்துக்களுக்கும் நவீனகால தேசிய அல்லது தேசிய இனக் கருத்துக்களுக்கும் சம்பந்தமே இல்லை. விஞ்ஞான அடிப்படையின்றி எழுந்த இந்தக் கருத்தின் வளர்ச்சியே சற்று விநோதமானது. சாதிக் கொடுமைகள் ஒழிந்த சமத்துவ தமிழ் சமுதாயம் வேண்டும் என்ற நல்லெண்ணம், வழி தெரியாமல், முதலில் பிராமணர்களையெல்லாம் ''ஆரியர்கள்'' என்றும், அல்லாத மற்ற அனைவரையும் திராவிடர்கள் என்றும் பிரித்தது. பின் ஏதோ ஒருவகையான புரியாத தர்க்கவழியாக, இந்தப் பிராமணர்களை மட்டும் குறித்த 'ஆரியர்' என்ற சொல் வடக்கே உள்ள—தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் நீங்கலாக—எல்லா மொழிகள் பேசும் எல்லா மக்களையும் குறிக்கும் சொல்லாக—பிராமணர்களையும் பிராமணர் அல்லாதாரையும் சேர்த்து—க் குறிக்கும் சொல்லாக மாறிற்று! ஏன்? எப்படி? என்பது இன்னும் விளங்காத புதிரே. இங்கு அந்த ஆராய்ச்சிக்குள்ளும் அதிகம் போகத் தேவையில்லை.

ஆனால் ஒன்றுமட்டும் தெளிவாகி வந்தது—உன்னிப் பாக ஊடுருவிப் பார்க்கும் அரசியல்வாதிகளுக்கு திராவிட இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் பல சமயங்களில் "திரா விடம்" என்று சொல்லும்பொழுதோ, அவர்கள் உள்ளத் திலே இருந்தது தமிழ்நாடே. அதுவும் பக்கத்து மாநிலங் களுக்கும் தமிழ்நாட்டுக்கும் இடையே சில விஷயங்களில் கருத்து மாறுபாடுகள் ஏற்படும் பொழுதெல்லாம், தி. மு. க. வினர் தமிழ்நாட்டின் சார்பாக நின்று இதர 'திராவிட' மாநிலங்களின் நியாயமான உரிமைகளையும் மறுக்கும் அள வுக்குச் செல்வதையும் பார்த்திருக்கிறோம். (தமிழகத்தில் உபயோகமாகாத தஞ்சைக் குறுவை அரிசி, வழக்கம்போல் மலையாளத்துக்குப் போகக்கூடாது என்று சில தி. மு. க. வினர் பேசியதும் எழுதியதும் நாமறிந்ததே)

தி. மு. க. வினர் நெய்வேலி நிலக்கரி பற்றியும் சேலம் இரும்பு பற்றியும், காவேரி வட்ட எண்ணெய் பற்றியும் பேசு கின்றனர், எழுதுகின்றனர் அல்லவா? ஆனால் ஆந்திராவுக்கு உருக்காலை வேண்டும் என்றோ அணுஉலை வேண்டு மென்றோ பேசுகிறார்களா. எழுதுகிறார்களா? அல்லது மைசூர் ராஜ்யத்தில் உள்ள பத்ராவதி உருக்காலை விஸ்தரிக் கப்படவேண்டும் என்று பேசுகிறார்களா அல்லது எழுதுகி றார்களா? அல்லது கேரளத்தில் கொச்சியில்தான் கப்பல் தளம் கட்டப்பட வேண்டும் என்றோ இதர கன ரகத் தொழில்கள் ஏற்படவேண்டும் என்றோ பேசுகி றார்களா? எழுதுகிறார்களா? இல்லை! ஏன் இல்லை? என்னதான் நான்கு மொழிகள் பேசும் "திராவிட இனம்" எனப் பேசினாலும், திட்டங்களுக்கு யோசனை கள் முன்வைக்கும்பொழுது உள்ளத்திலே இயல்பாக ஏற் படும் தமிழக உணர்ச்சி முன் வருகிறது. தமிழகத்தில் ஏற்படவேண்டிய வளர்ச்சிகள் பற்றிய யோசனைகளைத் தான் பேசுகின்றனர், எழுதுகின்றனர்.

இதனால்தானே தி.மு.க. வினர் 1957-ம் வருடப் பொதுத் தேர்தலுக்கு முன் தேர்தல் அறிக்கை தயாரித்த பொழுது தவிப்பு ஏற்பட்டது. இவ்வேலை திரு. சம்பத திடம் தரப்பட்டது. அவர் 1½ மணி நேரம் சிந்தித்து, சிந்

தித்து 'திராவிட'த்தின் தேவைகள் பற்றி எதுவும் எழுத முடியவில்லையாம். தமிழகத்தைப் பற்றித்தான் எழுத முடிந்ததாம். இவ்வாறு சம்பத் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள் அல்லவா?

இதில் வியப்பு ஒன்றும் இல்லை. நமக்கு இதுதான் இயல்பு; இதுதான் நியாயம்; இதுதான் எதார்த்த உணர்வு. இந்த எதார்த்த உணர்வு, கற்பனைத் திராவிட உணர்வை நிராகரிக்கின்றது என்பதை அவர்கள் பார்க்கவேண்டும்; பரிசீலிக்க வேண்டும் என்பதே நம் அவா. ஏன்! அவர்கள் இந்த எதார்த்தத்தைப் பார்த்தார்கள், பரிசீலித்தார்கள், ஒப்புக்கொண்டார்கள். வி. பி. ராமன் வீட்டில் நடந்த கருத்தரங்கிலே.

அதிலிருந்து அடுத்தபடியாக கட்சி முழுவதிலும் அப்படிப்பட்ட ஒரு கருத்துப் பரிமாற்றத்தை நடத்தி, விவரமான விளக்கமான விவாதத்தை நடத்தி 'திராவிட நாடு' என்பதை விடுத்து, தமிழ்நாட்டின் தேவைகளை வற்புறுத்தும் நிலைக்கு வந்திருக்க வேண்டும். அவ்வாறு செய்திருந்தால் அது காரியசாத்தியமான தெளிவான அரசியல் முடிவாக இருந்திருக்கும். அவ்வாறு செய்திருந்தால் அவர்கள் கட்சியிலே பிளவு ஏற்பட்டிருக்காது. திரு. ஈ. வி. கே. சம்பத் பிரிந்திருக்கமாட்டார்; தனிக்கட்சி அமைத்திருக்கமாட்டார். தமிழ்நாட்டில் காங்கிரசுக்குப் புதிய தெம்பு ஏற்பட்டிருக்காது.

அதுமட்டுமல்ல, தமிழகத்தில் இதர முற்போக்குக் கட்சிகள் மகிழ்ச்சியுடன் அம்முடிவை வரவேற்றிருக்கும். தமிழக காங்கிரஸ் தலைமைக்குப் பேரிடியாக இருந்திருக்கும்; தமிழ்நாட்டின் முன்னேற்றத்திற்கான ஒரு உடனடித் திட்டத்தின் அடிப்படையில் கம்யூனிஸ்டுக் கட்சியும் தி. மு. க.வினரும் ஒன்றுபட்டிருக்க முடியும்!

## த. தே. கட்சிக்கு ஒரு கேள்வி

திராவிட தேசியம் என்று ஒன்று இல்லை என்பதை உணர்ந்துள்ளது மிகவும் சரியானது. அதே சமயம் இந்திய தேசியம் என்பது இல்லை என்று கூறுகிறீர்களே.

அது உண்மைதானே? இந்தியாவில் பல்வேறு மொழி பேசும் மக்களும் ஒன்ருக நின்று அரசியல் சுதந்திரம் பெற்ருேம். அதேபோல் சுதந்திர இந்தியாவில் மொழிவழி அமைப்புக்களுக்காக ஒருவருக்கொருவர் ஆதரவாக நின்று முன்னேறினேம். கோவாவைப் போர்த்துகீசிய வெறியர்களிடமிருந்து மீட்க அறப்போர் நடந்தபொழுது - 1956ல் - அதில் மராட்டியத் தொண்டர்கள் மட்டும் அன்றி, பாஞ்சால, வங்க, தமிழக, ஆந்திரத் தொண்டர்களும் கலந்து கொள்ளவில்லையா? அந்த வீரர்களில் பலரை போர்த்துகீசிய வெறியர்கள் சுட்டுக் கொன்றபொழுது இந்தியா முழுதும் கொதித்தெழவில்லையா? ஒவ்வொரு இந்தியன் மனதிலும் ஆத்திரம் பீறிட்டதல்லவா?

ஏன்? இந்திய விஞ்ஞானியோ எழுத்தாளனே அல்லது இந்தியத் திரைப்படமோ-எந்த மொழியைச் சேர்ந்ததாக இருந்தாலும் உலக அரங்கில் கவுரவிக்கப்பட்டால் இந்தியர்கள் அனைவர் மனத்திலும் பெருமித உணர்ச்சி ஏற்படுகிறதல்லவா? ஓட்டப் பந்தயங்களிலோ அல்லது கிரிக்கெட், ஹாக்கி, டென்னிஸ் போன்ற விளையாட்டுகளிலோ இந்தியர்கள் வெளிநாடுகளில் வெற்றியோ, தோல்வியோ பெறும்பொழுது இவ்விளையாட்டுக்களில் அக்கரை உள்ளவர்கள்-குறிப்பாக இந்தியா முழுவதும் உள்ள மாணவர்கள் வாலிபர்கள் மகிழ்ச்சி அல்லது வருத்தம் அடையவில்லையா? இவ்வாறு அடுக்கிக் கொண்டே போகலாம்.

பல நூற்றுண்டுகளாக ஏற்பட்டு வந்துள்ள கலப்பு, வளர்ந்துள்ள உறவுகள், பல சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்ததன் மத்தியிலும், எண்ணற்ற சிற்றரசர்களின் குட்டிச் சண்டைகளின் மத்தியிலும், உருவாகி வளர்ந்து வந்த இந்தியன் என்ற உணர்வு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்த விடுதலைப் போரின்மூலம் குறிப்பான வடிவமும் குணமும் கொண்ட உணர்ச்சி, தனி மாநிலம் கோரினலும், மொழிவழி அமைப்புக்காகப் போராடினலும், தங்கள் மொழியின் உரிமையை வரம்பு மீறி வற்புறுத்தினலும், இந்தியாவில் எந்த மொழி பேசும் மக்களும் தனி நாடாகப் பிரியவேண்டும் என்று கேட்காமல், இந்தி

யன் என்றே இருக்கவேண்டும் என்ற உண்மையான விருப்பம்-இந்தியாவில் உள்ள மிக மிகப் பெரும்பாலான மக்களின் விருப்பு—இவை அனைத்தும் இல்லை என்று கொள்வது உண்மையாகுமா?

தமிழக உணர்ச்சி உண்டு! இந்திய தேசிய உணர்ச்சியும் உண்டு! ஆனால் திராவிட உணர்ச்சி இல்லை!

## 1962 பொதுத் தேர்தலும் நாமும்

இதுவரை கூறப்பட்டுள்ளது பற்றி தமிழ் மக்கள் அனைவரும் சிந்திப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. உடனடி ஏற்காதவர்களும் நிச்சயமாகச் சிந்திப்பார்கள் என்றே நம்புகிறோம். குறிப்பாக பகுத்து ஆராய்ந்து பார்க்கவேண்டியவர்கள் சிந்தித்துத்தான் ஆகவேண்டும். ஆனால் இச் சிந்தனையும் ஆராய்ச்சியும் உடனடி முடிவுக்கு கொண்டு வந்துவிடும் என்று நாம் எதிர்பார்க்கவில்லை. இன்னும் கொஞ்சக்காலம் பிடிக்கத்தான் செய்யும்.

ஆனால் 1962-ம் வருடம் பிப்ரவரி-மார்ச் மாதங்களில் மூன்றும் பொதுத் தேர்தல்கள் வருகின்றன. தேர்தல்களில் தமிழ் மக்கள் முன்புள்ள கேள்வி என்ன? திராவிட தேசியமா, தமிழ் தேசியமா என்பதா? இக்கேள்வியை எழுப்பினாலே இல்லை என்ற பதில் தானாகவே முன்வரும்! நமது தி.மு.க. நண்பர்கள் தேர்தல் பிரச்சாரத்தின்பொழுது திராவிடநாட்டுப் பிரிவினையை வற்புறுத்திப் பேசுவதன் மூலம், 1962 தேர்தல்களிலே தீர்மானமாகி முடிவாகும் விஷயமா இது?

இந்திய அரசியல் சட்டத்தின்படி இந்தியாவிலிருந்து எப்பகுதியாவது பிரிய வேண்டுமேயானால் 'மக்கள் சபையிலே மூன்றில் இரண்டு பங்கு ஆதரவுடன் தீர்மானிக்கப்படவேண்டும் என்பது நாம் அனைவரும் அறிந்ததே. அது நிற்க. இன்று தங்களது செல்வாக்கும் பலமும் எவ்வளவு என்பதை தி. மு. க. தலைவர்கள் நிதானமாகவும் விவேகத்துடனும் கணக்கிடுவார்களேயானால்-வேறு வகையாகக் கணக்கிடுவார்கள் என்று நாம் நினைக்கவில்லை—

வருகிற தேர்தல்களில் தமிழ் மக்களில் மெஜாரிடியை திராவிட நாட்டுக்காதரவாகத் திருப்பிவிட முடியும் என்று அவர்கள் எதிர்பார்க்க இடமில்லை. எந்தக் கட்சியின் இறுதி இலட்சியமும் இந்த 1962 தேர்தலிலே முடிவாகப் போவதுமில்லை. இதில் எவருக்கும் சந்தேகம் இருக்க நியாயமுமில்லை.

## எஞ்சும் கடமை என்ன?

மக்களின் நலனில் அக்கரை உள்ள கட்சிகளின் முன் நிற்கும் கடமை என்ன? காங்கிரஸை முறியடிக்க வேண்டும் என்று அனைவரும் பேசுகிறோம். மக்களில் கணிசமான பகுதியினரும் இந்த ஆட்சியும், ஆட்சி முறையும் மாறவேண்டும் என்று விரும்புகின்றனர். ஏன்? காங்கிரஸ் சர்க்காரின் வரிக்கொள்கை, விலைவாசி உயர்வுக் கொள்கை, மிராசுதார் ஆதரவுக்கொள்கை, முதலாளித்வ-வளர்ப்புக் கொள்கை...இந்த மக்கள்-விரோதக் கொள்கையினால் ஏற்படும் இன்னல்கள் தவிர்க்கப்படவேண்டும் என்று மக்கள் கோருகின்றனர்.

இந்த உணர்வுக்கேற்ற முறையில், உடனடி நிவாரணத்தைத் தரக்கூடிய சில உருப்படியான யோசனைகளை முன்வைத்து அவைகளுக்காக நாம் அனைவரும் தி. மு. க. கம்யூனிஸ்டுக் கட்சி, தமிழ் தேசியக் கட்சி, தமிழரசுக் கழகம், பி. சோ., சோஷலிஸ்டுக் கட்சி, குடியரசு கட்சி ஆகிய நாம் அனைவரும்—கூட்டாக நின்று காங்கிரசை எதிர்க்கவேண்டும் இதுதான் கம்யூனிஸ்டுக் கட்சியின் மாநில மகாநாடு, சென்ற அக்டோபரிலேயே கூறியது. இம் முடிவைத்தான் இதர கட்சிகளுக்கு அனுப்பி வைத்தது. அவர்களிடமிருந்து பதிலை இன்னும் எதிர்பார்க்கிறது. இதர சகோதரக் கட்சிகளின் பதிலைப் பொறுத்திருக்கும் வருகிற 1962 தேர்தல்களின் முடிவு!

---

ஜனசக்தி பிரஸ், 32, பிராட்வே, சென்னை

# அவசியம் படிக்கவேண்டிய அரிய நூல்கள்

| | | |
|---|---|---|
| இடதுசாரி கம்யூனிசம் (லெனின்) | ரூ. | 1-50 |
| அரசாங்கமும் புரட்சியும் (லெனின்) | ,, | 1-50 |
| அராஜக வாதமா, சோஷலிசமா? (ஸ்டாலின்) | ,, | 0-75 |
| உட்கட்சிப் போராட்டம் (லியோசோஷி) | ,, | 1-00 |
| முரண்பாட்டைப்பற்றி (மாசே-துங்) | ,, | 0-44 |
| மதத்தைப்பற்றி (லெனின்) | ,, | 0-75 |
| உலகக் கம்யூனிஸ்ட் கட்சிகளின் கூட்டறிக்கை | ,, | 0-30 |
| உலகக் கம்யூனிஸ்ட் கட்சிகளின் வேண்டுகோள் | ,, | 0-05 |
| அரசியல் தீர்மானம் | ,, | 0-30 |
| அரசியல் பாடங்கள் | ,, | 0-75 |
| ஜனநாயக முன்னணி | ,, | 0-06 |
| தேர்தல் அணிக்கோர் திட்டம் | ,, | 0-10 |
| வள்ளுவர் வாழ்ந்த தமிழகம் (சாமி சிதம்பரனார்) | ,, | 2-50 |
| பாரதியின் தத்துவஞானம் | ,, | 0-25 |

கிடைக்குமிடம் :

**என்சிபிஎச் பிரைவேட் லிமிடெட்,**

6, நல்லதம்பி செட்டித் தெரு, சென்னை-2.